5th April 1958]

THE HON. SRI V. RAMIAH : நாட்டின் முன்னேற்றத்தை தடை செய்யாமல் வேண்டிய ஜீப்புகள் வேண்டிய அளவு கொடுக்க சர்க்கார் எப்பொழுதும் தயாராயிருக்கிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : ஒரு டிபார்ட்மெண்டி லிருந்து மற்றொரு டிப்பார்ட்மெண்ட்டிற்கு மாற்றுவதை ரிட்ரென்ச் மெண்ட் என்று நினைக்கிறீர்களா ?

THE HON. SRI V. RAMIAH : உபரியாக இருக்கக்கூடிய ஜீப்களை ஒரு இடத்தில் சேகரித்து வைத்து எப்பொழுது எந்தெந்த இலாகாவிற்குத் தேவையோ அப்படிக் கொடுப்பதுதான் நன்ருகயிருக்கும்.

SRI M. KALYANASUNDARAM : ஜில்லா போலீஸ் அதிகாரிகளிடம் இருக்கும் ஸ்டேஷன் வாகன்களை குறைக்கும் யோசனை சர்க்காருக்கு உண்டா ?

THE HON. SRI V. RAMIAH : தனி கேள்வி போட வேண்டும்.

SRI A. GOVINDASAMY : ப்ளாக் டெவலப்மெண்ட் ஆபீஸர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் ஜீப்களை "வித்ட்ரா" செய்ய வேண்டுமென்று பல்வந்தராய் மேத்தா அவர்களின் யோசனையை சர்க்கார் ஏற்றுக்கொண் டிருக்கிறதா ?

THE HON. SRI V. RAMIAH : அதையெல்லாம் மனதில் வைத்துத் தான் ஸ்பெஷல் ஆபீஸர் பரிசீலனை செய்து சிபார்சு செய்திருக்கிருர்கள்.

SRI K. PERIANNAN : இம்மாதிரி ஜீப்களை ஜில்லா ஹரிஜன அதிகாரிகளுக்கு கொடுத்து ஜில்லாவில் உள்ள ஹரிஜன மக்களின் குறைகளை நிவர்திக்க சர்க்கார் யோசிக்குமா ?

THE HON. SRI V. RAMIAH : எந்தெந்த அதிகாரிகளுக்கு தேவையோ அவர்களுக்கு கொடுக்க வேண்டுமென்ற அடிப்படையில்தான் ஜில்லாவில் இருக்கக்கூடிய எல்லா ஜீப்களையும் ஒரு இடத்தில் சேகரித்து தேவைக்குத் தகுந்தவாறு கொடுக்கப்படும்.

*Community Development Projects*

* 574 Q.—SRI G. ANNAMALAI MUTHURAJA : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether there is any proposal to include Ilupur and Viralimalai areas of the Tiruchirappalli district under the Community Development Project; and

(b) if so, when?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

(b) It is not possible now to say when the National Extension Service Scheme will be extended to the areas in question. They will have to wait for their turn.

SRI G. ANNAMALAI MUTHURAJA : கிராம அபிவிருத்தி திட்டங்களை ஏற்படுத்துவதற்காக வேண்டிய ஆபீஸ்களை அதிகமாக பிற்போக் கான இடங்களில் ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. இவ்விதம் இப்போது செய்யப்படுவதில்லே. உதாரணமாக திருச்சியிலிருந்து விராலிமலே, இமுப்பூர் போன்ற இடங்களுக்கு செல்லும் 25 மைல் தூரமும் ஒரே காடாக இருந்து கொண்டிருக்கிறது. அப்பேர்ப்பட்ட இடங்களில் போகும் போது அமைச்சர் அவர்களுக்கும் நன்ருக இது தெரிந்திருக்கும் என்று நம்புகிறேன் , . . .

[5th April 1958

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் அவர்கள் ஒரு சிறிய பிரசங்கம் செய்யக்கூடாது. கேள்வி மாத்திரம் கேட்கவேண்டும்.

SRI G. ANNAMALAI MUTHURAJA : ஆகவே இந்த இடங்களில் ஆபீஸ்களை ஏற்படுத்துவதற்கு ஏதாவது திட்டங்கள் உண்டா என்பதை அறிய வேண்டுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் முதலில் சொன்னதற்கு மேல் கூடுதலாக இதில் இப்போது சொல்லுவதற்கு ஒன்றுமில்லை.

### *Compulsory Elementary Education*

* 576 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the names of areas in the South Arcot district where compulsory elementary education was introduced during 1956-57; and

(*b*) the number of attendance officers employed in those areas?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Compulsory elementary education was not introduced in South Arcot district during 1956–57.

(*b*) Does not arise.

### *Co-operative Credit Societies*

* 577 *Q.*—SRIMATHI A. S. PONNAMMAL : Will the Hon. the Minister for Industries be pleased to the state—

(*a*) the number of co-operative credit societies in Nilakottai;

(*b*) the number of such societies which have not applied for loan for over one year from the Central Co-operative Bank and the reasons therefor;

(*c*) the number of Harijan members in those societies ; and

(*d*) the number among them who have obtained loans?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) 123.

(*b*) Twenty societies have not applied to the Central Banks for loans during the period as they are either dormant or are having overdues under loans payable to the Central Bank.

(*c*) & (*d*) Particulars are not readily available and it may take time to collect the information from all the 123 societies individually.

SRIMATHI A. S. PONNAMMAL : கனம் தலைவர் அவர்களே, ஒரு சில ஸொஸைட்டிகளில் இருந்து பணம் படைத்த விவசாயிகள் குறைந்த வட்டிக்கு பணத்தை கடனாக வாங்கி அதிக வட்டிக்கு மற்ற விவசாயிகளுக்கு கொடுத்து வருவது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? அவ்விதமென்றால் அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்படும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்த விபரம் எனக்கு தெரியாது. அந்த விதமாக யாராவது செய்வார்களானால், அவர்களுடைய பெயர்களை எழுதி அனுப்பினால் அவர்களுக்கு கொடுக்காமல் இருப்பதற்கு வேண்டிய முயற்சிகளை செய்யலாம்.